# أدعية وأذكار
# من الكتاب والسُّنّة الصَّحيحة

يدعى بها بعرفة وغيرها

## குர்ஆனிலும் ஸஹீஹான சுன்னாவிலும் இடம்பெற்றுள்ள பல "துஆ"களும் "திக்ர்"களும்

*அரபா வெளியிலும் ஏனைய சந்தர்ப்பங்களிலும் இவை மூலம் பிரார்த்திக்கலாம்*

منتزعة من كتاب

((تبصير الناسك بأحكام المناسك على ضوء الكتاب والسنة والمأثور عن الصحابة))

"தப்ஸீருன் நாஸிக் பிஅஃகாமில் மனாஸிக்" என்ற ஹஜ்ஜின் கிரிகைகள் பற்றிய நூலில் இருந்து எடுக்கப்பட்ட ஒரு பகுதி


تأليف

عبد المحسن بن حمد العباد البدر

**தொகுப்பு**

**அப்துல் முஃஸின் இப்னு ஹமத் அல்-அப்பாத்**

**தமிழில்**

**மதீனா இஸ்லாமியப் பல்கலைகழக இலங்கை மாணவர்களில் ஒருவன்**

# أدعية وأذكار من الكتاب والسنّة الصّحيحة

## يُدعى بها في عرفة و غيرها

# குர்ஆனிலும் ஸஹீஹான சுன்னாவிலும் இடம்பெற்றுள்ள பல "துஆ"களும் "திக்ர்"களும்

*அரபா வெளியிலும் ஏனைய சந்தர்ப்பங்களிலும் இவை மூலம் பிரார்த்திக்கலாம்*

﴿حَسْبِيَ اللَّهُ لَا إِلَهَ إِلَّا هُوَ عَلَيْهِ تَوَكَّلْتُ وَهُوَ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ﴾ [التوبة: ١٢٩]

9:129. எனக்கு அல்லாஹ்வே போதுமானவன். வழிபடுவதற்குரிய நாயன் அவனையன்றி (வேறுயாரும்) இல்லை; அவன் மீதே நான் (பொறுப்பு சுமத்தி என் காரியங்களை ஒப்படைத்து அவனை சார்ந்திருந்து) தவக்குல் வைத்துவிட்டேன்; அவன் மகத்தான அரியாசனத்தின் (அர்ஷின்) அதிபதி.

﴿فَتَعَالَى اللَّهُ الْمَلِكُ الْحَقُّ لَا إِلَهَ إِلَّا هُوَ رَبُّ الْعَرْشِ الْكَرِيمِ﴾ [المؤمنون: ١١٦]

23:116. உண்மையான அரசனாகிய அல்லாஹ் மிக்க உயர்ந்தவன். அவனைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் இல்லை. அவன் கண்ணியமிக்க அர்ஷுக்குச் சொந்தக்காரன்.

﴿الْحَمْدُ لِلَّهِ وَسَلَامٌ عَلَى عِبَادِهِ الَّذِينَ اصْطَفَى﴾ [النمل: ٥٩]

27:59. புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக் குரியனவே. தன்னுடைய அடியார்களில் அவன் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்ளின் மீது "ஸலாம் (ஈடேற்றம்) உண்டாவதாக".

﴿الْحَمْدُ لِلَّهِ الَّذِي لَهُ مَا فِي السَّمَاوَاتِ وَمَا فِي الْأَرْضِ وَلَهُ الْحَمْدُ فِي الْآخِرَةِ وَهُوَ الْحَكِيمُ الْخَبِيرُ﴾ [سبأ: ١]

34:1. வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ளவையும் எவனுக்கு உரியனவோ அந்த அல்லாஹ்வுக்கே புகழ் அனைத்தும்! மறுமையிலும் எல்லா புகழும் அவனுக்குரியதே! அவன் நுண்ணறிவாளனாகவும், (அனைத்தையும்) தெரிந்தவனாகவும் இருக்கின்றான்.

﴿حَسْبِيَ اللَّهُ عَلَيْهِ يَتَوَكَّلُ الْمُتَوَكِّلُونَ﴾ [الزمر: ٣٨]

39:38. எனக்கு அல்லாஹ்வே போதுமானவன். தவக்குல் வைப்பவர்கள் (பாரம் சாட்டி சார்ந்திருப்பவர்கள்) அவன் மீதே (பொறுப்பு சுமத்தி அவனை சார்ந்திருந்து) தவக்குல் வைக்கின்றனர்.

﴿هُوَ الرَّحْمَنُ آمَنَّا بِهِ وَعَلَيْهِ تَوَكَّلْنَا﴾ [الملك: ٢٩]

67:29. அவன் பெரும் கருணையாளனாவான். அவன் மீதே நாங்கள் (பொறுப்பு சுமத்தி அவனை சார்ந்திருந்து) தவக்குல் வைத்துவிட்டோம்.

○ «لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، لَهُ الْمُلْكُ وَلَهُ الْحَمْدُ وَهُوَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ»[١].

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனையே தவிர (எவரும்) இல்லை. அவனுக்கு இணையாக எவருமில்லை. அவனுக்கே ஆட்சி உரியது. அவனுக்கே புகழுமுரியது. அவன் யாவற்றின் மீதும் பேராற்றலுள்ளவன்[2].

○ «لاَ حَوْلَ وَلاَ قُوَّةَ إِلَّا بِاللَّهِ»[٣].

அல்லாஹ்வின் (உதவி) மூலமே அன்றி (எவராலும் பாவங்களிலிருந்தோ கெடுதலிலிருந்தோ) விலகிச் செல்லவும் முடியாது, (நல்லறங்கள் புரியவோ நற்பயன்கள் அடையவோ) சக்தியும் இல்லை[4].

○ «حَسْبُنَا اللَّهُ وَنِعْمَ الوَكِيلُ»[٥].

எங்களுக்கு அல்லாஹ் போதுமானவன்; அவனே பொறுப்பு சாட்டப்படுவோரில் சிறந்தவன்[6].

○ «سُبْحَانَ اللَّهِ وَبِحَمْدِهِ، سُبْحَانَ اللَّهِ العَظِيمِ»[٧].

அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்வதுடன் (எந்த குறையுமற்றவன் என) அவனின் தூய்மையை பறைசாட்டுகிறேன்; மிக்க மகத்துவமுள்ள அல்லாஹ்வின் தூய்மையை பறைசாட்டுகிறேன்[8].

○ «سُبْحَانَ اللهِ، وَالْحَمْدُ لِلَّهِ، وَلَا إِلَهَ إِلَّا اللهُ، وَاللهُ أَكْبَرُ»[٩].

(எந்த குறையுமற்றவன் என) அல்லாஹ்வின் தூய்மையை பறைசாட்டுகிறேன். புகழ் அனைத்தும் அல்லாஹ்வுக்கே. வணக்கத்திற்குரியவன் அல்லாஹ்வைத் தவிர (எவரும்) இல்லை. அல்லாஹ் மிகப் பெரியவன்[10].

---

(١) رواه الترمذي (٣٥٨٥) عن ابن عمر رضي الله عنهما، وهو حسن لغيره؛ انظر «السَّلسلة الصحيحة» للألباني (١٥٠٣).

(2) திர்மிதீ: (3585), அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலியல்லாஹு அன்ஹுமா), அறிவிப்பாளர் வரிசை: ஹஸன் லிகைரிஹ். பார்க்க: அல்பானீயின் அஸ்ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா (1503).

(٣) رواه البخاري (٤٢٠٢) ومسلم (٦٨٦٨) عن أبي موسى الأشعري ﷺ وفيه وصف هذه الكلمة بأنها كنز من كنوز الجنة.

(4) புகாரீ: (4202), முஸ்லிம்: (6868), அறிவிப்பவர்: அபூ மூஸா (ரலியல்லாஹு அன்ஹு). இவ்வார்த்தை சொர்கத்தின் பொக்கிஷங்களில் ஒரு பொக்கிஷம் என்று இங்கு வர்ணிக்கப்பட்டுள்ளது.

(٥) رواه البخاري (٤٥٦٣) عن ابن عباس رضي الله عنهما.

(6) புகாரீ: (4563), அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹுமா).

(٧) رواه البخاري (٦٦٨٢) ومسلم (٦٨٤٦) عن أبي هريرة ﷺ، ولفظه : «كلمتان خفيفتان على اللِّسان، ثقيلتان في الميزان، حبيبتان إلى الرحمن: سبحان الله وبحمده، سبحان الله العظيم».

(8) புகாரீ: (6682), முஸ்லிம்: (6846), அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), "சுப்ஹானல்லாஹி வபிஹம்திஹி", "சுப்ஹானல்லாஹில் அழீம்" ஆகியவை நாவுக்கு எளிதானதும், (நன்மை, தீமை நிறுக்கப்படும்) தராசில் கனமானதும், அருளாளனின் பிரியத்திற்குரியதும் ஆன இரண்டு வாக்கியங்கள் என்று இடம் பெற்றுள்ளது.

(٩) رواه مسلم (٥٦٠١) عن سمرة بن جندب ﷺ، وفيه وصف هذه الأربع بأنَّها أحبُّ الكلام إلى الله.

(10) முஸ்லிம்: (5601), அறிவிப்பவர்: ஸமுரா இப்னு ஜுன்துப் (ரலியல்லாஹு அன்ஹு), அல்லாஹ்வுக்கு மிகப் பிரியமான வார்த்தைகளாக இந்நான்கு வார்த்தைகளும் இங்கு வர்ணிக்கப்பட்டுள்ளன.

❍ «سُبْحَانَ اللهِ وَبِحَمْدِهِ، عَدَدَ خَلْقِهِ وَرِضَا نَفْسِهِ وَزِنَةَ عَرْشِهِ وَمِدَادَ كَلِمَاتِهِ»(١).

அல்லாஹ்வுடைய படைப்புகளின் எண்ணிக்கை அளவுக்கும், அவன் பொருந்திக்கொள்ளும் அளவுக்கும், அவனது அரியணையின் (அர்சின்) எடையளவுக்கும், அவனுடைய சொற்களின் அதிகத்தன்மை அளவுக்கும் அல்லாஹ்வைப் போற்றிப் புகழ்வதுடன் (எந்த குறையுமற்றவன் என) அவனின் தூய்மையை பறைசாட்டுகிறேன்[2].

❍ «لَا إِلَهَ إِلَّا اللهُ وَحْدَهُ لَا شَرِيكَ لَهُ، اللهُ أَكْبَرُ كَبِيرًا، وَالْحَمْدُ لِلَّهِ كَثِيرًا، سُبْحَانَ اللهِ رَبِّ الْعَالَمِينَ، لَا حَوْلَ وَلَا قُوَّةَ إِلَّا بِاللهِ الْعَزِيزِ الْحَكِيمِ، اللهُمَّ اغْفِرْ لِي وَارْحَمْنِي وَاهْدِنِي وَارْزُقْنِي»(٣).

வணக்கத்திற்குரியவன் அல்லாஹ் ஒருவனையே தவிர (எவரும்) இல்லை. அவனுக்கு இணை (எவரும்) இல்லை. அல்லாஹ் மிகவும் பெரியவன். அவனைப் பெரியவன் எனப் பெருமைப்படுத்துகிறேன். அனைத்துப் புகழும் அல்லாஹ்வுக்கே உரியது என அதிகமாகப் புகழுகிறேன். அனைத்துலகங்களின் அதிபதியான அல்லாஹ் (அனைத்துக் குறைபாடுகளிலிருந்தும் தூய்மையானவன் என) அவனின் தூய்மையை பறைசாட்டுகிறேன். மிகைத்தவனும் ஞானமுடையவனுமான அல்லாஹ்வின் (உதவி) மூலமே அன்றி (எவராலும் பாவங்களிலிருந்தோ கெடுதலிலிருந்தோ) விலகிச் செல்லவும் முடியாது, (நல்லறங்கள் புரியவோ நற்பயன்கள் அடையவோ) சக்தியுமில்லை. அல்லாஹ்வே! எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! எனக்குக் கருணை புரிவாயாக. என்னை நேர் வழியில் செலுத்துவாயாக! எனக்கு வாழ்வாதாரம் வழங்குவாயாக[4]!

❍ «رَضِيتُ بِاللَّهِ رَبًّا، وَبِالْإِسْلَامِ دِينًا، وَبِمُحَمَّدٍ ﷺ رَسُولًا»(٥).

அல்லாஹ்வை இரட்சகனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸலாம்) அவர்களை (இறைத்)தூதராகவும் (மன நிறைவோடு ஏற்று) பொருந்திக்கொள்கிறேன்[6].

❍ «سُبْحَانَكَ اللَّهُمَّ وَبِحَمْدِكَ وَتَبَارَكَ اسْمُكَ وَتَعَالَى جَدُّكَ وَلَا إِلَهَ غَيْرُكَ»(٧).

அல்லாஹ்வே! உன்னைப் போற்றிப் புகழ்வதுடன் (எந்த குறையுமற்றவன் என) உன் தூய்மையை பறைசாட்டுகிறேன். உன் பெயர் மேலோங்கிவிட்டது / (அதன்) நன்மை பெருகிவிட்டது / நிலைத்துவிட்டது. உன் மகத்துவம் உயர்த்தியாகிவிட்டது. வணக்கத்திற்குரிய நாயன் உன்னைத் தவிர (எவரும்) இல்லை[8].

---

(١) رواه مسلم (٦٩١٣) عن جويرية ﵂.

(2) முஸ்லிம்: (6913), அறிவிப்பவர்: ஜுவைரியா (ரலியல்லாஹு அன்ஹா).

(٣) رواه مسلم (٦٨٤٨) عن سعد بن أبي وقاص ﵁.

(4) முஸ்லிம்: (6848), அறிவிப்பவர்: ஸஃத் இப்னு அபீ வக்காஸ் (ரலியல்லாஹு அன்ஹு).

(٥) رواه أبو داود (١٥٢٩) بإسناد صحيح عن أبي سعيد الخدري، ولفظه: «مَنْ قَالَ رَضِيتُ بِاللَّهِ رَبًّا وَبِالْإِسْلَامِ دِينًا وَبِمُحَمَّدٍ ﷺ رَسُولًا وَجَبَتْ لَهُ الْجَنَّةُ» ورواه مسلم (٤٨٧٩) عنه بمعناه ورواه مسلم (١٥١) عن العباس ﵁ ولفظه: «ذَاقَ طَعْمَ الإِيمَانِ، مَنْ رَضِيَ بِاللَّهِ رَبًّا» إلخ.

(6) அபூ தாவூத்: (1529), அறிவிப்பவர் :அபூ ஸஈத் அல்குத்ரீ (ரலியல்லாஹு அன்ஹு), அறிவிப்பாளர் வரிசை :ஸஹீஹ், இந்த ஹதீஸில் மேற்படி வாத்தையை எவர் கூறுகிறாரோ அவருக்கு சுவனம் கட்டாயமாகிவிட்டது என்றுள்ளது. இந்த நபித்தோழர் வழியாக இமாம் முஸ்லிமும் இதன் கருத்தை அறிவித்துள்ளார்(4879). மேலும், அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹு) வழியாகவும் பின்வருமாறு இமாம் முஸ்லிம் அறிவித்துள்ளார்(151): "யார் அல்லாஹ்வை இரட்சகனாகவும் இஸ்லாத்தை மார்க்கமாகவும் முஹம்மத் (ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸலாம்) அவர்களை (இறைத்)தூதராகவும் (மன நிறைவோடு ஏற்று) பொருந்திக்கொள்கிறாரோ அவர் ஈமானின் சுவையை சுவைத்தவராவார்".

(٧) رواه النسائي في عمل اليوم و الليلة (٨٤٩) بإسناد صحيح، ورواه غيره، انظر السلسلة الصحيحة للألباني (٢٥٩٨)، وقد وصف النبي ﷺ هذه الكلمات بأنها أحب الكلام إلى الله.

(8) நஸாஈயின் அமலுல் யவ்மி வல்லைலா: (849), அறிவிப்பாளர் வரிசை: ஸஹீஹ், பார்க்க: அல்பானீயின் அஸ்ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா (2598). அல்லாஹ்வுக்கு மிகப் பிரியமான வார்த்தைகளாக இந்த வார்த்தைகளை நபி (ஸல்லல்லாஹு அலைஹி வஸ்ஸலாம்) அவர்கள் வர்ணித்துள்ளார்கள்.

❍ «لَا إِلَهَ إِلَّا اللَّهُ الْعَظِيمُ الْحَلِيمُ، لَا إِلَهَ إِلَّا اللَّهُ رَبُّ الْعَرْشِ الْعَظِيمِ، لَا إِلَهَ إِلَّا اللَّهُ رَبُّ السَّمَوَاتِ وَرَبُّ الْأَرْضِ وَرَبُّ الْعَرْشِ الْكَرِيمِ»(١).

மிக மகத்தான, நிதானமான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (எவரும்) இல்லை. மகத்தான அரியாசனத்தின் (அர்ஷின்) அதிபதியான அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (எவரும்) இல்லை. வானங்களுக்குச் சொந்தக்காரனும், பூமிக்குச் சொந்தக்காரனும், கண்ணியமிக்க அர்ஷுக்குச் சொந்தக்காரனுமாகிய அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (எவரும்) இல்லை[2].

————————————

﴿رَبَّنَا تَقَبَّلْ مِنَّا إِنَّكَ أَنْتَ السَّمِيعُ الْعَلِيمُ﴾ [البقرة: ١٢٧]

2:127. எங்களுடைய இரட்சகனே! எங்களிடமிருந்து ஏற்றுக்கொள்வாயாக! நிச்சயமாக நீதான் நன்கு செவியுறுபவனாகவும் மிக அறிந்தவனாகவும் இருக்கின்றாய்.

﴿رَبَّنَا آتِنَا فِي الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ حَسَنَةً وَقِنَا عَذَابَ النَّارِ﴾ [البقرة: ٢٠١]

2:201. எங்கள் இரட்சகனே! எங்களுக்கு இவ்வுலகில் நற்பாக்கியத்தையும் மறுமையில் நற்பாக்கியத்தையும் தருவாயாக! (நரக) நெருப்பின் வேதனையிலிருந்தும் எங்களை நீ பாதுகாப்பாயாக!

﴿رَبَّنَا لَا تُؤَاخِذْنَا إِنْ نَسِينَا أَوْ أَخْطَأْنَا رَبَّنَا وَلَا تَحْمِلْ عَلَيْنَا إِصْرًا كَمَا حَمَلْتَهُ عَلَى الَّذِينَ مِنْ قَبْلِنَا رَبَّنَا وَلَا تُحَمِّلْنَا مَا لَا طَاقَةَ لَنَا بِهِ وَاعْفُ عَنَّا وَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا أَنْتَ مَوْلَانَا فَانْصُرْنَا عَلَى الْقَوْمِ الْكَافِرِينَ﴾ [البقرة: ٢٨٦]

2:286. எங்கள் இரட்சகனே! நாங்கள் மறந்துவிட்டால் அல்லது (அறியாமல்) தவறிழைத்துவிட்டால் நீ எங்களை (உன் தண்டனை மூலம்) பிடித்துவிடாதே! எங்கள் இரட்சகனே! எங்களுக்கு முன் சென்றோர் மீது (கடினமான கட்டளைகளை விதித்து) சுமத்திய சுமையை போன்று எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! எங்கள் சக்திக்கப்பாற்பட்ட (எங்களால் தாங்க முடியாத) சுமையை எங்கள் மீது சுமத்தாதிருப்பாயாக! (பாவங்களை நீக்கி) எங்களை பொறுத்தருள்வாயாக! (எங்கள் பாவங்களை மறைத்து) எங்களுக்கு மன்னிபை வழங்குவாயாக! எங்களுக்கு கருணை காட்டுவாயாக! நீயே எங்கள் பாதுகாவலன்; ஆகவே காஃபிரான (நிராகரிக்கும்) கூட்டத்தாருக்கு எதிராக (நாங்கள் வெற்றியடைய) எங்களுக்கு உதவிசெய்வாயாக!

﴿رَبَّنَا لَا تُزِغْ قُلُوبَنَا بَعْدَ إِذْ هَدَيْتَنَا وَهَبْ لَنَا مِنْ لَدُنْكَ رَحْمَةً إِنَّكَ أَنْتَ الْوَهَّابُ﴾ [آل عمران: ٨]

3:8. எங்கள் இரட்சகனே! நீ எங்களுக்கு நேர் வழியைக் காட்டிய பின் எங்கள் உள்ளங்கள் (அதிலிருந்து) தவறிவிடுமாறு செய்து விடாதே! இன்னும் நீ உன் புறத்திலிருந்து எங்களுக்கு (விசேடமான) அருளை அளிப்பாயாக! நிச்சயமாக நீயே பெருங் கொடைவழங்குபவனாவாய்.

﴿رَبَّنَا إِنَّنَا آمَنَّا فَاغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَقِنَا عَذَابَ النَّارِ﴾ [آل عمران: ١٦]

(١) رواه البخاري (٦٣٤٦) ومسلم (٦٩٢١) عن ابن عباس رضي الله عنهما.

(2) புகாரீ: (6346), முஸ்லிம்: (6921), அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹுமா).

3:16. எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நாங்கள் ஈமான் (நம்பிக்கை) கொண்டோம்; எனவே, எங்களுக்காக எங்கள் பாவங்களை (மறைத்து) மன்னித்துவிடுவாயாக! மேலும், (நரக) நெருப்பின் வேதனையிலிருந்து எங்களைக் காப்பாற்றுவாயாக!

﴿رَبِّ هَبْ لِي مِنْ لَدُنْكَ ذُرِّيَّةً طَيِّبَةً إِنَّكَ سَمِيعُ الدُّعَاءِ﴾ [آل عمران: ٣٨]

3:38. என் இரட்சகனே! உன்னிடமிருந்து எனக்கு ஒரு நல்ல சந்ததியைக் கொடுப்பாயாக! நிச்சயமாக நீ பிரார்த்தனையைச் செவிமடு(த்துப் பதிலளி)ப்பவனாக இருக்கின்றாய்.

﴿رَبَّنَا آمَنَّا بِمَا أَنْزَلْتَ وَاتَّبَعْنَا الرَّسُولَ فَاكْتُبْنَا مَعَ الشَّاهِدِينَ﴾ [آل عمران: ٥٣]

3:53. எங்கள் இரட்சகனே! நீ இறக்கியருளிய (வேதத்)தை நாங்கள் நம்பிக்கைகொண்டோம், தூதரையும் பின்பற்றிவிட்டோம்; எனவே எங்களை (சத்தியத்திற்கு) சாட்சி சொல்வோருடன் சேர்த்து எழுதுவாயாக!

﴿رَبَّنَا إِنَّنَا سَمِعْنَا مُنَادِيًا يُنَادِي لِلْإِيمَانِ أَنْ آمِنُوا بِرَبِّكُمْ فَآمَنَّا رَبَّنَا فَاغْفِرْ لَنَا ذُنُوبَنَا وَكَفِّرْ عَنَّا سَيِّئَاتِنَا وَتَوَفَّنَا مَعَ الْأَبْرَارِ (١٩٣) رَبَّنَا وَآتِنَا مَا وَعَدْتَنَا عَلَى رُسُلِكَ وَلَا تُخْزِنَا يَوْمَ الْقِيَامَةِ إِنَّكَ لَا تُخْلِفُ الْمِيعَادَ﴾ [آل عمران: ١٩٣، ١٩٤]

3:193. "எங்கள் இரட்சகனே! உங்கள் இரட்சகன் மீது நம்பிக்கை கொள்ளுங்கள் என்று (இறை)நம்பிக்கையின் பக்கம் அழைக்கக் கூடிய ஒருவரின் அழைப்பைச் செவிமடுத்து நாங்கள் ஈமான் கொண்டோம்; ஆதலால் எங்கள் இரட்சகனே! எங்களுக்கு, எங்கள் பாவங்களை (மறைத்து) மன்னிப்பாயாக! எங்கள் தீமைகளை எங்களை விட்டும் அகற்றி விடுவாயாக; இன்னும், (முடிவில்) நல்லோர்களுடன் எங்களை கைப்பற்று(வதன் மூலம் மரணிக்கச் செய்)வாயாக!

3:194. எங்கள் இரட்சகனே! இன்னும் உன் தூதர்கள் மூலமாக எங்களுக்கு நீ வாக்களித்ததை எங்களுக்குத் தருவாயாக! எழுப்பப்படும் (மறுமை) நாளில் நீ எங்களை இழிவுபடுத்திவிடாதே! நிச்சயமாக நீ வாக்குறுதி மீறமாட்டாய்.

﴿رَبَّنَا ظَلَمْنَا أَنْفُسَنَا وَإِنْ لَمْ تَغْفِرْ لَنَا وَتَرْحَمْنَا لَنَكُونَنَّ مِنَ الْخَاسِرِينَ﴾ [الأعراف: ٢٣]

7:23. எங்கள் இரட்சகனே! எங்களுக்கு நாங்களே அநீதி இழைத்துக்கொண்டோம். நீ எங்களை மன்னித்து, எங்களுக்கு கிருபை செய்யாவிட்டால், நிச்சயமாக நாங்கள் நஷ்டமடைந்தவர்களிலாகிவிடுவோம்.

﴿رَبَّنَا لَا تَجْعَلْنَا مَعَ الْقَوْمِ الظَّالِمِينَ﴾ [الأعراف: ٤٧]

7:47. எங்கள் இரட்சகனே! எங்களை அக்கிரமக்கார கூட்டத்துடன் ஆக்கி (சேர்த்து)விடாதே!

﴿أَنْتَ وَلِيُّنَا فَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا وَأَنْتَ خَيْرُ الْغَافِرِينَ (١٥٥) وَاكْتُبْ لَنَا فِي هَذِهِ الدُّنْيَا حَسَنَةً وَفِي الْآخِرَةِ﴾ [الأعراف: ١٥٥، ١٥٦]

7:155. நீ தான் எங்களுடைய பாதுகாவலன். ஆகவே எங்களுக்கு மன்னிப்பு அளிப்பாயாக! எங்களுக்கு கிருபை செய்வாயாக! மன்னிப்பவர்களிலெல்லாம் நீ தான் மிக்க மேன்மையானவன்.

7:156. இன்னும் இவ்வுலகத்திலும், மறுமையிலும் எங்களுக்கு (அழகிய) நன்(நிலை)மையையே எழுதி (விதித்து)வைப்பாயாக!

﴿عَلَى اللَّهِ تَوَكَّلْنَا رَبَّنَا لَا تَجْعَلْنَا فِتْنَةً لِلْقَوْمِ الظَّالِمِينَ (٨٥) وَنَجِّنَا بِرَحْمَتِكَ مِنَ الْقَوْمِ الْكَافِرِينَ﴾ [يونس: ٨٥، ٨٦]

10:85. அல்லாஹ்வின் மீதே நாங்கள் (பொறுப்பு சுமத்தி எங்கள் காரியங்களை ஒப்படைத்து அவனை சார்ந்திருந்து) தவக்குல் வைத்துவிட்டோம். எங்கள் இரட்சகனே! அநியாயம் செய்யும் கூட்டத்தாருக்கு எங்களை ஒரு சோதனையாக ஆக்கிவிடாதே! (நாம் தோல்வியடைந்தால் அதை கண்டு அவர்கள் அசத்தியத்தில் இன்னும் நிலைத்திருப்பார்கள். அல்லது அநியாயம் செய்யும் கூட்டத்தாரின் சோதனைக்கு - துன்புறுத்தலுக்கு எங்களை ஆளாக்கிவிடாதே!)

10:86. மேலும் காஃபிர்களான (நிராகரிக்கும்) கூட்டத்தாரிடமிருந்து உன் அருளினால் எங்களை நீ காப்பாற்றுவாயாக!

﴿رَبِّ اجْعَلْنِي مُقِيمَ الصَّلَاةِ وَمِنْ ذُرِّيَّتِي رَبَّنَا وَتَقَبَّلْ دُعَاءِ (٤٠) رَبَّنَا اغْفِرْ لِي وَلِوَالِدَيَّ وَلِلْمُؤْمِنِينَ يَوْمَ يَقُومُ الْحِسَابُ﴾ [إبراهيم: ٤٠، ٤١]

14:40. என் இரட்சகனே! தொழுகையை நிலைநிறுத்துவோராக என்னையும், என்னுடைய சந்ததியிலுள்ளோரையும் ஆக்குவாயாக! எங்கள் இரட்சகனே! என்னுடைய பிரார்த்தனையையும் ஏற்றுக் கொள்வாயாக!

14:41. எங்கள் இரட்சகனே! என்னையும், என் பெற்றோர்களையும், முஃமின்களையும் கேள்வி கணக்குக் கேட்கும் (மறுமை) நாளில் (பாவங்களை மறைத்து) மன்னிப்பாயாக!

﴿رَبِّ ارْحَمْهُمَا كَمَا رَبَّيَانِي صَغِيرًا﴾ [الإسراء: ٢٤]

17:24. என் இரட்சகனே! நான் சிறு பிள்ளையாக இருந்த நிலையில், என்னை அவ்விருவரும் வளர்த்தற்காக, நீ அவர்களிருவருக்கும் அருள் புரிவாயாக!

﴿رَبَّنَا آتِنَا مِنْ لَدُنْكَ رَحْمَةً وَهَيِّئْ لَنَا مِنْ أَمْرِنَا رَشَدًا﴾ [الكهف: ١٠]

18:10. எங்கள் இரட்சகனே! நீ உன்னிடமிருந்து எங்களுக்கு (பிரத்தியேகமான) ரஹ்மத்தை அருள்வாயாக! இன்னும் நீ எங்களுக்கு எங்கள் காரியத்தை சீரானதாக (நேர்வழிக்கு இட்டுச்செல்லகூடியதாக) அமைத்து (சுலபமாக்கி)த் தருவாயாக!

﴿رَبِّ اشْرَحْ لِي صَدْرِي (٢٥) وَيَسِّرْ لِي أَمْرِي﴾ [طه: ٢٥، ٢٦]

20:25. என் இரட்சகனே! எனக்காக என் நெஞ்சத்தை நீ (உறுதிப்படுத்தி, மனகஷ்டங்களை நீக்கி) விரிவாக்கி தருவாயாக!

20:26. என் காரியத்தை எனக்கு நீ எளிதாக்கியும் வைப்பாயாக!

﴿رَبِّ زِدْنِي عِلْمًا﴾ [طه: ١١٤]

20:114. என் இரட்சகனே! கல்வி அறிவை எனக்கு அதிகப்படுத்துவாயாக!

﴿لَا إِلَهَ إِلَّا أَنْتَ سُبْحَانَكَ إِنِّي كُنْتُ مِنَ الظَّالِمِينَ﴾ [الأنبياء: ٨٧]

21:87. உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (எவரும்) இல்லை; (நீ எந்த குறையுமற்றவன் என) உன் தூய்மையை பறைசாட்டுகிறேன்; நிச்சயமாக நான் அநியாயக்காரர்களில் (ஒருவனாக) இருந்துவிட்டேன்.

﴿رَبِّ أَعُوذُ بِكَ مِنْ هَمَزَاتِ الشَّيَاطِينِ (٩٧) وَأَعُوذُ بِكَ رَبِّ أَنْ يَحْضُرُونِ﴾ [المؤمنون: ٩٧، ٩٨]

23:97. என் இரட்சகனே! ஷைதானின் தூண்டுதல்களிலிருந்து நான் உன்னிடம் காவல் தேடி (ஒதுங்கிக்) கொள்கிறேன்.

23:98. என் இரட்சகனே! அவை (ஷைதான்கள்) என்னிடம் வருவதிலிருந்தும் உன்னிடம் காவல் தேடி (ஒதுங்கிக்) கொள்கிறேன்.

﴿رَبَّنَا آمَنَّا فَاغْفِرْ لَنَا وَارْحَمْنَا وَأَنْتَ خَيْرُ الرَّاحِمِينَ﴾ [المؤمنون: ١٠٩]

23:109. எங்கள் இரட்சகனே! நாங்கள் ஈமான் - விசுவாசம் கொண்டோம்; (எங்கள் பாவங்களை மறைத்து) எங்களை மன்னித்துவிடுவாயாக! எங்களுக்கு அருள் புரிவாயாக! நீயே அருள் புரிபவர்களிளெல்லாம் மிக்க சிறந்தவன்.

﴿رَبِّ اغْفِرْ وَارْحَمْ وَأَنْتَ خَيْرُ الرَّاحِمِينَ﴾ [المؤمنون: ١١٨]

23:118. என் இரட்சகனே! நீ (என்னை) மன்னித்துக் கிருபை செய்வாயாக! கிருபையாளர்களிலெல்லாம் நீயே மிகச் சிறந்தவன்.

﴿رَبَّنَا اصْرِفْ عَنَّا عَذَابَ جَهَنَّمَ إِنَّ عَذَابَهَا كَانَ غَرَامًا﴾ [الفرقان: ٦٥]

25:65. எங்கள் இரட்சகனே! எங்களைவிட்டும் நரகத்தின் வேதனையைத் திருப்புவாயாக; நிச்சயமாக அதன் வேதனை நிலையான - நிரந்தரமானதாகும்.

﴿رَبَّنَا هَبْ لَنَا مِنْ أَزْوَاجِنَا وَذُرِّيَّاتِنَا قُرَّةَ أَعْيُنٍ وَاجْعَلْنَا لِلْمُتَّقِينَ إِمَامًا﴾ [الفرقان: ٧٤]

25:74. எங்கள் இரட்சகனே! எங்கள் மனைவியரிடமும், எங்கள் சந்ததியரிடமும் இருந்து எங்களுக்குக் கண்களின் குளிர்ச்சியை அளிப்பாயாக! இன்னும் பயபக்தியுடையவர்களுக்கு எங்களை வழிகாட்டியாக ஆக்கியருள்வாயாக!

﴿رَبِّ أَوْزِعْنِي أَنْ أَشْكُرَ نِعْمَتَكَ الَّتِي أَنْعَمْتَ عَلَيَّ وَعَلَى وَالِدَيَّ وَأَنْ أَعْمَلَ صَالِحًا تَرْضَاهُ وَأَدْخِلْنِي بِرَحْمَتِكَ فِي عِبَادِكَ الصَّالِحِينَ﴾ [النمل: ١٩]

27:19. என் இரட்சகனே! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் புரிந்துள்ள உன் அருட்பாக்கியங்களுக்காக, நான் நன்றி செலுத்திக்கொண்டிருப்பதற்காகவும், நீ திருப்திப்படுகின்ற நற்செயலை செய்து வருவதற்காகவும், எனக்கு (உதிப்பை தூண்டி, அனுகூலம் புரிந்து) வழிசெய்வாயாக! இன்னும், உன் அருளால் என்னை உன்னுடைய நல்லடியார்களில் நுழைவித்து (சேர்த்து) வைப்பாயாக!

﴿رَبِّ هَبْ لِي مِنَ الصَّالِحِينَ﴾ [الصافات: ١٠٠]

37:100. என் இரட்சகனே! நீ எனக்கு நல்லோர்களில் இருக்கப்போகின்ற (ஒரு குழந்தையை / சந்ததியை) வழங்குவாயாக!

﴿رَبِّ أَوْزِعْنِي أَنْ أَشْكُرَ نِعْمَتَكَ الَّتِي أَنْعَمْتَ عَلَيَّ وَعَلَى وَالِدَيَّ وَأَنْ أَعْمَلَ صَالِحًا تَرْضَاهُ وَأَصْلِحْ لِي فِي ذُرِّيَّتِي إِنِّي تُبْتُ إِلَيْكَ وَإِنِّي مِنَ الْمُسْلِمِينَ﴾ [الأحقاف: ١٥]

46:15. என் இரட்சகனே! நீ என் மீதும், என் பெற்றோர் மீதும் புரிந்துள்ள உன் அருட்பாக்கியங்களுக்காக, நான் நன்றி செலுத்திக்கொண்டிருப்பதற்காகவும், நீ திருப்திப்படுகின்ற நற்செயலை செய்து வருவதற்காகவும், எனக்கு (உதிப்பை தூண்டி, அனுகூலம் புரிந்து) வழிசெய்வாயாக! எனக்காக என் சந்ததியையும் (எப்போதும் ஸாலிஹானவர்களாக்கி) சீர்படுத்தி வைப்பாயாக! மேலும், நிச்சயமாக நான் உன்பக்கமே மீண்டுவிட்டேன்; நான் முஸ்லிம்களில் நின்றுமுள்ளவனாக (உனக்கு முற்றிலும் கட்டுப்பட்டவனாக)வும் ஆகிவிட்டேன்.

﴿رَبَّنَا اغْفِرْ لَنَا وَلِإِخْوَانِنَا الَّذِينَ سَبَقُونَا بِالْإِيمَانِ وَلَا تَجْعَلْ فِي قُلُوبِنَا غِلًّا لِلَّذِينَ آمَنُوا رَبَّنَا إِنَّكَ رَءُوفٌ رَحِيمٌ﴾ [الحشر: ١٠]

59:10. எங்கள் இரட்சகனே! எங்களுக்கும், ஈமான் கொள்வதில் எங்களுக்கு முந்தியவர்களான எங்கள் சகோதரர்களுக்கும் மன்னிப்பு அளிப்பாயாக! மேலும், நம்பிக்கை (ஈமான்) கொண்டவர்களைப் பற்றி எங்களுடைய உள்ளங்களில் எந்தக் குரோதத்தையும் ஆக்காதிருப்பாயாக! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ மிக்க இரக்கமுடையவன், கிருபை மிக்கவன்.

﴿رَبَّنَا عَلَيْكَ تَوَكَّلْنَا وَإِلَيْكَ أَنَبْنَا وَإِلَيْكَ الْمَصِيرُ (٤) رَبَّنَا لَا تَجْعَلْنَا فِتْنَةً لِلَّذِينَ كَفَرُوا وَاغْفِرْ لَنَا رَبَّنَا إِنَّكَ أَنْتَ الْعَزِيزُ الْحَكِيمُ﴾ [الممتحنة: ٤، ٥]

60:4. எங்கள் இரட்சகனே! உன் மீதே நாங்கள் (பொறுப்பு சுமத்தி எங்கள் காரியங்களை ஒப்படைத்து உன்னை சார்ந்திருந்து) தவக்குல் வைத்துவிட்டோம். (உன் பொருத்தத்தை தேடி) உன் பக்கமே நாங்கள் மீண்டுவிட்டோம். மேலும், உன்னிடமே (இறுதியாக மறுமையில்) வர வேண்டியதிருக்கின்றது.

60:5. எங்கள் இரட்சகனே! நிராகரிப்பாளர்களுக்கு எங்களை ஒரு சோதனையாக ஆக்கிவிடாதே! (நாம் தோல்வியடைந்தால் அதை கண்டு அவர்கள் அசத்தியத்தில் இன்னும் நிலைத்திருப்பார்கள் அல்லது அநியாயம் செய்யும் கூட்டத்தாரின் சோதனைக்கு - துன்புறுத்தலுக்கு எங்களை ஆளாக்கிவிடாதே!) எங்களை நீ மன்னிப்பாயாக! எங்கள் இரட்சகனே! நிச்சயமாக நீ தான் (யாவரையும்) மிகைத்தவனும் ஞானம் மிக்கவனும்.

❍ «اللَّهُمَّ أَنْتَ رَبِّي لَا إِلَهَ إِلَّا أَنْتَ، خَلَقْتَنِي وَأَنَا عَبْدُكَ، وَأَنَا عَلَى عَهْدِكَ وَوَعْدِكَ مَا اسْتَطَعْتُ، أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا صَنَعْتُ، أَبُوءُ لَكَ بِنِعْمَتِكَ عَلَيَّ، وَأَبُوءُ بِذَنْبِي فَاغْفِرْ لِي فَإِنَّهُ لَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ»[1].

அல்லாஹ்வே! நீயே என் இரட்சகன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (எவரும்) இல்லை. நீ என்னைப் படைத்தாய்; நான் உன் அடிமை. நான் உன் (உடன் செய்து கொண்ட) உடன்படிக்கையிலும் (நான் உனக்களித்த / நீ எமக்களித்த) உன் வாக்குறுதியிலும் என்னால் இயன்ற வரை (நிலைத்து) இருக்கிறேன். நான் செய்தவற்றின் தீமைகளிலிருந்து உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக்கொள்கிறேன்! என் மீது உன்

(١) رواه البخاري (٦٣٠٦) عن شداد بن أوس ﷺ وقد وصف النبي ﷺ هذا الدعاء بأنه سيد الاستغفار.

அருட்பாக்கியங்களை (நீயே சொறிந்திருக்கிறாய் என) நான் ஒப்புக்கொள்கிறேன். மேலும், என் பாவங்களையும் ஒப்புக்கொள்கிறேன். எனவே, என்னை மன்னிப்பாயாக! ஏனெனில், உன்னைத் தவிர (வேறெவரும்) பாவத்தை மன்னிக்கமாட்டார்[1].

❍ «اللَّهُمَّ إِنِّي ظَلَمْتُ نَفْسِي ظُلْمًا كَثِيرًا، وَلَا يَغْفِرُ الذُّنُوبَ إِلَّا أَنْتَ، فَاغْفِرْ لِي مَغْفِرَةً مِنْ عِنْدِكَ وَارْحَمْنِي إِنَّك أَنْتَ الْغَفُورُ الرَّحِيمُ»(٢).

அல்லாஹ்வே! எனக்கு நானே அதிகமாக அநீதி இழைத்துக் கொண்டேன். உன்னைத் தவிர (வேறெவரும்) பாவத்தை மன்னிக்கமாட்டார். எனவே, உன்னிடமிருந்து எனக்கு மன்னிப்பு வழங்குவாயாக! மேலும், எனக்குக் கருணைகாட்டுவாயாக! நிச்சயமாக நீ மன்னிப்பவனும் கருணையாளனுமாவாய்[3].

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْهَمِّ وَالْحَزَنِ وَالْعَجْزِ وَالْكَسَلِ وَالْجُبْنِ وَالْبُخْلِ وَضَلَعِ الدَّيْنِ وَغَلَبَةِ الرِّجَالِ»(٤).

அல்லாஹ்வே! (எதிர்காலத்தில் நடக்கப் போவது பற்றிய) கவலை, (கடந்த காலத்தை பற்றிய) துக்கம், இயலாமை, சோம்பல், கோழைத் தனம், கஞ்சத்தனம், கடன் சுமை, மனிதர்களின் அடக்குமுறை ஆகியவையிலிருந்து நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்[5].

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْبُخْلِ، وَأَعُوذُ بِكَ مِنَ الْجُبْنِ، وَأَعُوذُ بِكَ أَنْ أُرَدَّ إِلَى أَرْذَلِ الْعُمُرِ، وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الدُّنْيَا، وَأَعُوذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ»(٦).

அல்லாஹ்வே! கஞ்சத்தனத்திலிருந்து பாதுகாப்புக் கேட்கிறேன். கோழைத் தனத்திலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன். மிக மோசமான (புத்திக்குறைவும் உடல் பலவீனமுள்ள தள்ளாத) வயதுக்கு நான் தள்ளப்படுவதை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன். இவ்வுலகின் சோதனையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன். மண்ணறையின் வேதனையிலிருந்து நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்[7].

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْكَسَلِ وَالْهَرَمِ وَالْمَأْثَمِ وَالْمَغْرَمِ، وَمِنْ فِتْنَةِ الْقَبْرِ وَعَذَابِ الْقَبْرِ، وَمِنْ فِتْنَةِ النَّارِ وَعَذَابِ النَّارِ، وَمِنْ شَرِّ فِتْنَةِ الْغِنَى، وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الْفَقْرِ، وَأَعُوذُ بِكَ مِنْ فِتْنَةِ الْمَسِيحِ الدَّجَّالِ، اللَّهُمَّ اغْسِلْ عَنِّي خَطَايَايَ بِمَاءِ الثَّلْجِ وَالْبَرَدِ، وَنَقِّ قَلْبِي مِنَ الْخَطَايَا كَمَا نَقَّيْتَ الثَّوْبَ الْأَبْيَضَ مِنَ الدَّنَسِ، وَبَاعِدْ بَيْنِي وَبَيْنَ خَطَايَايَ كَمَا بَاعَدْتَ بَيْنَ الْمَشْرِقِ وَالْمَغْرِبِ»(٨).

அல்லாஹ்வே! சோம்பல், தள்ளாமைக் காலம், பாவம், கடன் ஆகியவையிலிருந்தும், மண்ணறையின்

---

(1) புகாரீ: (6306), அறிவிப்பவர்: ஷத்தாத் இப்னு அவ்ஸ் (ரலியல்லாஹு அன்ஹு), நபி (ஸல்லாஹு அலைஹி வஸல்லம்) அவர்கள் இந்த பிரார்த்தனையை இஸ்திக்பாரில் தலையாயது என வர்ணித்துள்ளார்கள்.

(٢) رواه البخاري (٨٣٤) ومسلم (٦٨٦٩) عن أبي بكر ﷺ.

(3) புகாரீ: (834), முஸ்லிம்: (6869), அறிவிப்பவர்: அபூ பக்ர் (ரலியல்லாஹு அன்ஹு).

(٤) رواه البخاري (٦٣٦٩) عن أنس ﷺ.

(5) புகாரீ: (6369), அறிவிப்பவர்: அனஸ் (ரலியல்லாஹு அன்ஹு).

(٦) رواه البخاري (٦٣٦٥) عن سعد بن أبي وقاص ﷺ.

(7) புகாரீ: (6365), அறிவிப்பவர்: ஸஃத் இப்னு அபீ வக்காஸ் (ரலியல்லாஹு அன்ஹு).

(٨) رواه البخاري (٦٣٦٨) ومسلم (٦٨٧١) عن عائشة ﷺ.

சோதனை மற்றும் மண்ணறையின் வேதனையிலிருந்தும், நரகத்தின் சோதனை மற்றும், நரகத்தின் வேதனையிலிருந்தும், செல்வத்தின் தீமைகளிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்! மேலும், ஏழ்மையின் சோதனையிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்! (ஒற்றை கண் குருடனும், பொய்யனுமான) மஸீஹுத் தஜ்ஜாலின் சோதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்! அல்லாஹ்வே! பனிக்கட்டி மற்றும் ஆலங்கட்டி நீரினால் என் தவறுகளை என்னிலிருந்து கழுவுவாயாக! மேலும், அழுக்கிலிருந்து வெண்மையான ஆடையை நீ தூய்மைப் படுத்துவதைப் போன்று தவறுகளிலிருந்து என் உள்ளத்தைத் தூய்மைப்படுத்துவாயாக! கிழக்கிற்கும் மேற்கிற்கும் மத்தியில் நீ தூரமாக்கியதைப் போன்று எனக்கும் என் தவறுகளுக்குமிடையே நீ தூரத்தை ஏற்படுத்துவாயாக[1]!

❍ «رَبِّ اغْفِرْ لِي خَطِيئَتِي وَجَهْلِي وَإِسْرَافِي فِي أَمْرِي كُلِّهِ وَمَا أَنْتَ أَعْلَمُ بِهِ مِنِّي، اللَّهُمَّ اغْفِرْ لِي خَطَايَايَ وَعَمْدِي وَجَهْلِي وَهَزْلِي، وَكُلُّ ذَلِكَ عِنْدِي، اللَّهُمَّ اغْفِرْ لِي مَا قَدَّمْتُ وَمَا أَخَّرْتُ وَمَا أَسْرَرْتُ وَمَا أَعْلَنْتُ، أَنْتَ الْمُقَدِّمُ وَأَنْتَ الْمُؤَخِّرُ وَأَنْتَ عَلَى كُلِّ شَيْءٍ قَدِيرٌ»[٢].

என் இரட்சகனே! என் குற்றங்களையும், என் அறியாமையையும், என் விடயங்கள் அனைத்திலும் (நடந்து) உள்ள அளவுகடத்தலையும், என்னை விட நீ எவற்றையெல்லாம் அறிந்துள்ளாயோ அவற்றையும் மன்னிப்பாயாக! அல்லாஹ்வே! நான் தவறுதலாகச் செய்ததையும், நாடிச் செய்ததையும், அறியாமல் செய்ததையும், விளையாட்டாக செய்ததையும் மன்னிப்பாயாக! இவை யாவும் என்னிடமுள்ளன. அல்லாஹ்வே! நான் முன்னால் செய்ததையும், பின்னால் செய்ததையும், இரகசியமாகச் செய்ததையும் பகிரங்கமாகச் செய்ததையும் மன்னிப்பாயாக! நீயே முற்படுத்துபவன். நீயே பிற் படுத்துபவன். நீ அனைத்திற்கும் சக்தி பெற்றவன்[3].

❍ «اللَّهُمَّ رَبَّ السَّمَوَاتِ وَرَبَّ الْأَرْضِ وَرَبَّ الْعَرْشِ الْعَظِيمِ، رَبَّنَا وَرَبَّ كُلِّ شَيْءٍ، فَالِقَ الْحَبِّ وَالنَّوَى وَمُنْزِلَ التَّوْرَاةِ وَالْإِنْجِيلِ وَالْفُرْقَانِ، أَعُوذُ بِكَ مِنْ شَرِّ كُلِّ شَيْءٍ أَنْتَ آخِذٌ بِنَاصِيَتِهِ، اللَّهُمَّ أَنْتَ الْأَوَّلُ فَلَيْسَ قَبْلَكَ شَيْءٌ، وَأَنْتَ الْآخِرُ فَلَيْسَ بَعْدَكَ شَيْءٌ، وَأَنْتَ الظَّاهِرُ فَلَيْسَ فَوْقَكَ شَيْءٌ، وَأَنْتَ الْبَاطِنُ فَلَيْسَ دُونَكَ شَيْءٌ، اقْضِ عَنَّا الدَّيْنَ وَأَغْنِنَا مِنَ الْفَقْرِ»[٤].

அல்லாஹ்வே! வானங்களின் இரட்சகனே! பூமியின் இரட்சகனே! மகத்தான அர்ஷ்-அரியணையின் இரட்சகனே! எங்கள் இரட்சகனே! அனைத்துப் பொருட்களின் இரட்சகனே! தானிய வித்துகளையும் விதைகளையும் பிள(ந்து முளைப்பி)ப்பவனே! (வேதங்களான) தவ்ராத், இன்ஜீல், ஃபுர்கான் (குர்ஆன்) ஆகியவையை இறக்கி(அருளி)யவனே! அனைவற்றின் தீங்கிலிருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக்கொள்கிறேன்; அவற்றின் முன்நெற்றி ரோமங்களை நீயே பிடித்துள்ளாய் (யாவும் உன் அதிகாரத்திற்குள்ளே இருக்கின்றன). அல்லாஹ்வே! நீயே ஆரம்பமானவன்; உனக்கு முன்னர் வேறெதுவும் இல்லை. நீயே இறுதியானவன்; உனக்குப் பின்னர் வேறெதுவும் இல்லை. நீயே மேலானவன்; உனக்கு மேலே வேறொன்றுமில்லை. நீயே அடித்தளமானவன்; உனக்குக் கீழே வேறொன்றுமில்லை. எங்கள் கடன்களை நிறைவேற்றி வைப்பாயாக! வறுமையிலிருந்து (காத்து) எங்களைத் (தன்னிறைவடைந்து) தேவையற்று இருக்கச் செய்வாயாக[5]!

---

(1) புகாரீ: (6368), முஸ்லிம்: (6871), அறிவிப்பவர்: ஆஇஷா (ரலியல்லாஹு அன்ஹா).

(٢) رواه البخاري (٦٣٩٨) ومسلم (٦٩٠١) عن أبي موسى ﷺ.

(3) புகாரீ: (6398), முஸ்லிம்: (6901), அறிவிப்பவர்: அபூ மூஸா (ரலியல்லாஹு அன்ஹு).

(٤) رواه مسلم (٦٨٨٩) عن أبي هريرة ﷺ.

(5) முஸ்லிம்: (6889), அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு).

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا عَمِلْتُ وَمِنْ شَرِّ مَا لَمْ أَعْمَلْ»(١).

அல்லாஹ்வே! நான் செய்தவற்றின் தீங்கிலிருந்தும், நான் செய்யாதவற்றின் தீங்கிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்(2) !

❍ «اللَّهُمَّ أَصْلِحْ لِي دِينِي الَّذِي هُوَ عِصْمَةُ أَمْرِي، وَأَصْلِحْ لِي دُنْيَايَ الَّتِي فِيهَا مَعَاشِي، وَأَصْلِحْ لِي آخِرَتِي الَّتِي فِيهَا مَعَادِي وَاجْعَلِ الْحَيَاةَ زِيَادَةً لِي فِي كُلِّ خَيْرٍ، وَاجْعَلِ الْمَوْتَ رَاحَةً لِي مِنْ كُلِّ شَرٍّ»(٣).

அல்லாஹ்வே! எனது (அனைத்து) விடயங்களுக்கும் பாதுகாப்பாக உள்ள எனது மார்க்கத்தை எனக்குச் சீர்படுத்துவாயாக! என் வாழ்வு அமைந்துள்ள எனது இம்மையையும் எனக்குச் சீர்படுத்துவாயாக! என் திரும்புமிடம் அமைந்துள்ள எனது மறுமையையும் எனக்குச் சீர்படுத்துவாயாக! இவ்வாழ்க்கையை, எல்லா நன்மைகளிலும் எனக்குக் அதிகரிப்பை ஏற்படுத்தக் (காரணமாக இருக்கக்)கூடியதாக ஆக்குவாயாக! மரணத்தை, (பாவங்கள், கவலைகள், சோதனைகள் போன்ற) எல்லாத் கெடுதிகளிலிருந்தும் எனக்குக் ஓய்வு(வை ஏற்படுத்தக்கூடியதானது) ஆக ஆக்குவாயாக(4)!

❍ «اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْهُدَى وَالتُّقَى وَالْعَفَافَ وَالْغِنَى»(٥).

அல்லாஹ்வே! உன்னிடம் நான் நேர்வழியையும் (இறை) அச்சத்தையும் (ஹராத்தையும் மானக்கேடானதையும் விட்டு விலகியிருக்கும்) சுய கட்டுப்பாட்டையும் (மற்றவரிடம் இருப்பதை நாடாமலும், நீ வழங்கியுள்ளதில் மனதிருப்தியுமடையும்) தன்னிறைவையும் கேட்கிறேன்(6)!

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْعَجْزِ وَالْكَسَلِ، وَالْجُبْنِ وَالْبُخْلِ، وَالْهَرَمِ وَعَذَابِ الْقَبْرِ، اللَّهُمَّ آتِ نَفْسِي تَقْوَاهَا وَزَكِّهَا أَنْتَ خَيْرُ مَنْ زَكَّاهَا، أَنْتَ وَلِيُّهَا وَمَوْلَاهَا، اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ عِلْمٍ لَا يَنْفَعُ، وَمِنْ قَلْبٍ لَا يَخْشَعُ، وَمِنْ نَفْسٍ لَا تَشْبَعُ، وَمِنْ دَعْوَةٍ لَا يُسْتَجَابُ لَهَا»(٧).

அல்லாஹ்வே! உன்னிடம் நான் இயலாமை, சோம்பல், கோழைத்தனம், கஞ்சத்தனம், தள்ளாமை, மண்ணறையின் வேதனை ஆகியவையிலிருந்து பாதுகாப்புக் கேட்கிறேன். அல்லாஹ்வே! எனது உள்ளத்திற்கு (உன் தண்டனை பற்றிய) அச்சத்தை தந்துவிடு! மேலும், (அனைத்து குறைகள், துர்குணங்கள், பாவங்கள் போன்றவையில் இருந்து) அதைத் தூய்மைப்படுத்துவாயாக! நீயே அதைத் தூய்மைப்படுத்துவோரில் மிகச் சிறந்தவன். நீயே அதன் பாதுகாவலனும் அதன் உரிமையாளனும். அல்லாஹ்வே! உன்னிடம் நான் (இஃலாஸ் இன்மை, தேவையின்மை போன்ற காரணங்களால்) பயனளிக்காத கல்வியிலிருந்தும் (வன்மையடைந்து உனக்கு) பணிந்து அமைதியாகாத உள்ளத்திலிருந்தும் (உலகாதாயங்களில் பேராசை கொண்டு) பசிதீராத (நிறைவடையாத) மனத்திலிருந்தும் (நிபாந்தனைகளை பேணாததினாலோ, என்னில் அல்லது என் வேண்டுதலிலுள்ள ஒரு தீமைக்காகவோ) பதிலளிக்கப்படாத (ஏறுக்கொள்ளப்படாத) பிரார்த்தனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்(8) !

---

(١) رواه مسلم (٦٨٩٥) عن عائشة ﵂.

(2) முஸ்லிம்: (6895), அறிவிப்பவர்: ஆஇஷா (ரலியல்லாஹு அன்ஹா).

(٣) رواه مسلم (٦٩٠٣) عن أبي هريرة ﵁.

(4) முஸ்லிம்: (6903), அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு).

(٥) رواه مسلم (٦٩٠٤) عن ابن مسعود ﵁.

(6) முஸ்லிம்: (6904), அறிவிப்பவர் : அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலியல்லாஹு அன்ஹு).

(٧) رواه مسلم (٦٩٠٦) عن زيد بن أرقم ﵁.

(8) முஸ்லிம்: (6906), அறிவிப்பவர்: ஸைத் பின் அர்கம் (ரலியல்லாஹு அன்ஹு).

❍ «اللَّهُمَّ لَكَ أَسْلَمْتُ وَبِكَ آمَنْتُ، وَعَلَيْكَ تَوَكَّلْتُ وَإِلَيْكَ أَنَبْتُ وَبِكَ خَاصَمْتُ، اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِعِزَّتِكَ لَا إِلَهَ إِلَّا أَنْتَ أَنْ تُضِلَّنِي، أَنْتَ الْحَيُّ الَّذِي لَا يَمُوتُ وَالْجِنُّ وَالْإِنْسُ يَمُوتُونَ»(١).

அல்லாஹ்வே! உனக்கே கட்டுப்பட்டேன். உன்னையே நம்பிக்கை கொண்டுள்ளேன். உன் மீதே நான் (பொறுப்பு சுமத்தி என் காரியங்களை ஒப்படைத்து உன்னை சார்ந்திருந்து) தவக்குல் வைத்துவிட்டேன். (என் அனைத்து விடயங்களிலும்) உன்னிடமே மீண்டுவிட்டேன். உன் உதவி கொண்டே (உனக்காகவே) வாதாடினேன் (முரண்பட்டுக்கொண்டேன்). அல்லாஹ்வே! உனது வல்லமை/கண்ணியத்தை கொண்டு -உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (வேறெவரும்) இல்லை- நீ என்னை வழிதவறச் செய்வதிலிருந்து நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்! நீ இறக்காது உயிருடன் நிலைத்திருப்பவன்; ஜின்களும் மனிதர்களும் இறந்துவிடுவார்கள்(2).

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ زَوَالِ نِعْمَتِكَ وَتَحَوُّلِ عَافِيَتِكَ وَفُجَاءَةِ نِقْمَتِكَ وَجَمِيعِ سَخَطِكَ»(٣).

அல்லாஹ்வே! உன் நற்பாக்கியங்கள் நீங்குவதிலிருந்தும், (நீ அருளியுள்ள ஆரோக்கியம், செல்வம், நல்ல நிலைமை போன்ற) உன் ஈடேற்றம் (நோய், வறுமை, துன்பம் போன்ற தீங்குகளாக) மாறி விடுவதிலிருந்தும், உன் தண்டனை (எதிர்பாராத விதமாக) திடீரென வருவதிலிருந்தும், உன் அனைத்து (வகை) வெறுப்பு, கோபத்தி(ற்கான காரணங்களி)ல் இருந்தும் உன்னிடம் நான் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக்கொள்கிறேன்(4)!

❍ «اللَّهُمَّ مُصَرِّفَ الْقُلُوبِ صَرِّفْ قُلُوبَنَا عَلَى طَاعَتِكَ»(٥).

அல்லாஹ்வே! உள்ளங்களைத் திருப்புகின்றவனே! எங்கள் உள்ளங்களை உன்னை வழிப்படுவதின் மீது திருப்பிவைப்பாயாக(6)!

❍ «اللَّهُمَّ اغْفِرْ لِي ذَنْبِي كُلَّهُ، دِقَّهُ، وَجِلَّهُ، وَأَوَّلَهُ، وَآخِرَهُ، وَعَلَانِيَتَهُ، وَسِرَّهُ»(٧).

அல்லாஹ்வே! என் பாவங்கள் அனைத்தையும்; அவற்றில் சிறியதையும் பெரியதையும், ஆரம்பமானதையும், இறுதியானதையும், வெளிப்படையானதையும் மறைமுகமானதையும் மன்னிப்பாயாக(8)!

❍ «اللَّهُمَّ رَبَّ جَبْرَائِيلَ وَمِيكَائِيلَ وَإِسْرَافِيلَ، فَاطِرَ السَّمَوَاتِ وَالأَرْضِ، عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ، أَنْتَ تَحْكُمُ بَيْنَ عِبَادِكَ فِيمَا كَانُوا فِيهِ يَخْتَلِفُونَ، اهْدِنِي لِمَا اخْتُلِفَ فِيهِ مِنَ الْحَقِّ بِإِذْنِكَ، إِنَّكَ تَهْدِي مَنْ تَشَاءُ إِلَى صِرَاطٍ مُسْتَقِيمٍ»(٩).

அல்லாஹ்வே! (வானவர்களாகிய) ஜிப்ராஈல், மீக்காஈல், இஸ்ராஃபீல் ஆகியோரின் இரட்சகனே! வானங்களையும் பூமியையும் (முன் உதாரணமின்றிப்) படைத்தவனே! மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிந்தவனே! நீயே உன் அடியார்களிடையே அவர்கள் கருத்துவேறுபாடு கொண்டுள்ள விடயங்களில் (மறுமையில்)

(١) رواه البخاري (٧٣٨٣) مسلم (٦٨٩٩) عن ابن عباس رضي الله عنهما.

(2) புகாரீ: (7383), முஸ்லிம் :(6899), அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹுமா).

(٣) رواه مسلم (٦٩٤٣) عن ابن عمر رضي الله عنهما.

(4) முஸ்லிம் :(6943), அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலியல்லாஹு அன்ஹுமா).

(٥) رواه مسلم (٦٧٥٠) عن عبد الله بن عمرو رضي الله عنهما.

(6) முஸ்லிம் :(6750), அறிவிப்பவர்: அப்துல்லாஹ் இப்னு அமர் (ரலியல்லாஹு அன்ஹுமா).

(٧) رواه مسلم (١٠٨٤) عن أبي هريرة ﷺ.

(8) முஸ்லிம் :(1084), அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு).

(٩) رواه مسلم (١٨١١) عن عائشة ﷺ.

தீர்ப்பு வழங்குவாய். (பிறரால்) மாற்றுக் கருத்து கொள்ளப்பட்டுள்ள சத்தியத்திற்கு உன் அனுமதியால் எனக்கு வழிகாட்டி (அதில் நிலைத்திருக்க) வைப்பாயாக! நிச்சயமாமாக நீயே நீ நாடியவர்களை நேர் வழிக்கு வழிகாட்டுகிறாய்[1].

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِرِضَاكَ مِنْ سَخَطِكَ، وَبِمُعَافَاتِكَ مِنْ عُقُوبَتِكَ، وَأَعُوذُ بِكَ مِنْكَ، لَا أُحْصِي ثَنَاءً عَلَيْكَ، أَنْتَ كَمَا أَثْنَيْتَ عَلَى نَفْسِكَ»[٢].

அல்லாஹ்வே! உன் கோபத்திலிருந்து உனது (திருப்) பொருத்தத்தை கொண்டும், உன் தண்டனையிலிருந்து உனது ஈடேற்றத்தை கொண்டும் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன். (நீ தண்டிக்காதிருக்க வேண்டுமென்பதற்காக) உன்னிலிருந்தும் உன்னிடமே பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன். உன் மீது புகழை (முழுமையாக அறிந்து, அளவிட்டு) எண்ணிமுடிக்க என்னால் இயலாது. நீ உன்னை புகழ்ந்துகொண்டதைப் போன்றே நீ (புகழுடையவனாய்) இருக்கிறாய்[3].

❍ «اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ جَهْدِ الْبَلَاءِ وَدَرَكِ الشَّقَاءِ وَسُوءِ الْقَضَاءِ وَشَمَاتَةِ الْأَعْدَاءِ»[٤].

அல்லாஹ்வே! சோதனையின் கஷ்டத்திலிருந்தும், துர்பாக்கியம் (என்னை) வந்தடைவதிலிருந்தும், விதியின் கெடுதியிலிருந்தும், (எனெக்கு ஏற்படும் சோதனையால்) எதிரிகள் மகிழ்ச்சியடைதல் (அதனால் எனெக்கு ஏற்படும் மன உளைச்சல்) இல் இருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்[5]!

❍ «اللَّهُمَّ اجْعَلْ لِي فِي قَلْبِي نُورًا، وَفِي لِسَانِي نُورًا، وَفِي سَمْعِي نُورًا، وَفِي بَصَرِي نُورًا، وَمِنْ فَوْقِي نُورًا، وَمِنْ تَحْتِي نُورًا، وَعَنْ يَمِينِي نُورًا، وَعَنْ شِمَالِي نُورًا، وَمِنْ بَيْنِ يَدَيَّ نُورًا، وَمِنْ خَلْفِي نُورًا، وَاجْعَلْ فِي نَفْسِي نُورًا، وَأَعْظِمْ لِي نُورًا»[٦].

அல்லாஹ்வே! என் உள்ளத்தில் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் நாவிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் செவியிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் பார்வையிலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! எனக்கு மேலேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக! எனக்கு கீழேயும் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் வலப் பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் இடப்பக்கத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! எனக்கு முன்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! எனக்குப் பின்னாலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! என் மனத்திலும் ஒளியை ஏற்படுத்துவாயாக! எனக்கு ஒளியை வலிமையாக்குவாயாக[7]!

❍ «اللَّهُمَّ صَلِّ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا صَلَّيْتَ عَلَى إِبْرَاهِيمَ وعَلَى آلِ إِبْرَاهِيمَ، إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ، اللَّهُمَّ بَارِكْ عَلَى مُحَمَّدٍ وَعَلَى آلِ مُحَمَّدٍ كَمَا بَارَكْتَ عَلَى إِبْرَاهِيمَ وَعَلَى آلِ إِبْرَاهِيمَ إِنَّكَ حَمِيدٌ مَجِيدٌ»[٨].

---

(1) முஸ்லிம்: (1811), அறிவிப்பவர்: ஆஇஷா (ரலியல்லாஹு அன்ஹா).

(٢) رواه مسلم (١٠٩٠) عن عائشة ﵂.

(3) முஸ்லிம்: (1090), அறிவிப்பவர்: ஆஇஷா (ரலியல்லாஹு அன்ஹா).

(٤) رواه البخاري (٦٣٤٧) ومسلم (٦٨٧٧) عن أبي هريرة ﵁ ولفظه «كَانَ رَسُولُ اللَّهِ ﷺ يَتَعَوَّذُ مِنْ ...».

(5) புகாரீ: (6347), முஸ்லிம்: (6877), அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு). மேற்படி விடயங்களில் இருந்து அல்லாஹ்வின் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) பாதுகாப்பு தேடுவார்கள் என்று ஹதீஸின் வாசகத்தில் இடம்பெற்றுள்ளது. [மொழிபெயர்ப்பாளர்: மேற்படி நான்கு விடயங்களில் நான்காவதாக குறிப்பிடப்பட்ட "எதிரிகள் மகிழ்ச்சியடைதல்" என்பது ஸுப்யான் இப்னு உயைனா எனும் அறிவிப்பாளர் மேலதிகமாக குறிப்பிட்டது என்பதை இமாம் இப்னு ஹஜர் ஆதாரத்துடன் விளக்கியுள்ளார். பார்க்க: பாத்ஹுல்பாரீ 11/149]

(٦) رواه البخاري (٦٣١٦) ومسلم (١٧٩٧) عن ابن عباس رضي الله عنهما.

(7) புகாரீ: (6316), முஸ்லிம்: (1797), அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹுமா).

(٨) رواه البخاري (٣٣٧٠) ومسلم (٩٠٨) عن كعب بن عُجرة ﵁.

அல்லாஹ்வே! இப்ராஹீம் அவர்களின் மீதும் இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ (வானவர்களிடம் புகழ்ந்தது) ஸலவாது கூறியதை / கருணை புரிந்ததைப் போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் (வானவர்களிடம் புகழ்ந்து) ஸலவாது கூறுவாயாக / கருணை புரிந்திடுவாயாக! நிச்சயமாக நீயே புகழுக்குரியவனும், மேன்மை மிக்கவனும் ஆவாய். அல்லாஹ்வே! இப்ராஹீம் அவர்களின் மீதும் இப்ராஹீம் அவர்களின் குடும்பத்தார் மீதும் நீ பரகத் செய்ததை (அருள் வளத்தைப் பொழிந்ததைப்) போல் முஹம்மதின் மீதும் முஹம்மதின் குடும்பத்தார் மீதும் பரகத் செய்(து அருள் வளத்தைப் பொழிந்திடு)! நிச்சயமாக நீயே புகழுக்குரியவனும், மேன்மை மிக்கவனும் ஆவாய்[(1)]!

❍ «اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنَ الْخَيْرِ كُلِّهِ عَاجِلِهِ وَآجِلِهِ مَا عَلِمْتُ مِنْهُ وَمَا لَمْ أَعْلَمْ، وَأَعُوذُ بِكَ مِنَ الشَّرِّ كُلِّهِ عَاجِلِهِ وَآجِلِهِ مَا عَلِمْتُ مِنْهُ وَمَا لَمْ أَعْلَمْ، اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا سَأَلَكَ عَبْدُكَ وَنَبِيُّكَ، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا عَاذَ بِهِ عَبْدُكَ وَنَبِيُّكَ، اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْجَنَّةَ وَمَا قَرَّبَ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ عَمَلٍ، وَأَعُوذُ بِكَ مِنَ النَّارِ وَمَا قَرَّبَ إِلَيْهَا مِنْ قَوْلٍ أَوْ عَمَلٍ وَأَسْأَلُكَ أَنْ تَجْعَلَ كُلَّ قَضَاءٍ قَضَيْتَهُ لِي خَيْرًا»(٢).

அல்லாஹ்வே! நான் அறிந்த மற்றும் அறியாத விரைவாக மற்றும் தாமதமாக ஏற்பட இருக்கும் அனைத்து நலவுகளில் இருந்தும் உன்னிடம் கேட்கிறேன். மேலும் நான் அறிந்த மற்றும் அறியாத விரைவாக மற்றும் தாமதமாக ஏற்பட இருக்கும் அனைத்து தீமைகளை விட்டும் உன்னிடம் பாதுகாப்பு வேண்டுகிறேன். அல்லாஹ்வே! (முஹம்மத் ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம் ஆகிய) உன் அடியானும் உன் நபியும் உன்னிடம் கேட்ட நலவுகளிலிருந்து நான் உன்னிடம் கேட்கிறேன். மேலும் உன் அடியானும் உன் நபியும் பாதுகாப்புத் வேண்டிய தீமைகளை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்பு வேண்டுகிறேன். அல்லாஹ்வே! உன்னிடம் சுவனத்தையும் அதன் பக்கம் நெருக்கத்தை ஏற்படுத்தும் சொல்லையும் செயலையும் கேட்கிறேன். மேலும் நரகம் மற்றும் அதன் பக்கம் நெருக்கத்தை ஏற்படுத்தும் சொல்லையும் செயலையும் விட்டும் உன்னிடம் பாதுகாப்பு வேண்டுகிறேன். எனக்காக நீ விதித்த ஒவ்வொரு விதியையும் சிறந்ததாக ஆக்கித்தருமாறும் உன்னிடம் கேட்கிறேன்[(3)].

❍ «اللَّهُمَّ بِعِلْمِكَ الْغَيْبَ وَقُدْرَتِكَ عَلَى الْخَلْقِ أَحْيِنِي مَا عَلِمْتَ الْحَيَاةَ خَيْرًا لِي، وَتَوَفَّنِي إِذَا عَلِمْتَ الْوَفَاةَ خَيْرًا لِي، اللَّهُمَّ وَأَسْأَلُكَ خَشْيَتَكَ فِي الْغَيْبِ وَالشَّهَادَةِ، وَأَسْأَلُكَ كَلِمَةَ الْحَقِّ فِي الرِّضَا وَالْغَضَبِ، وَأَسْأَلُكَ الْقَصْدَ فِي الْفَقْرِ وَالْغِنَى، وَأَسْأَلُكَ نَعِيمًا لَا يَنْفَدُ، وَأَسْأَلُكَ قُرَّةَ عَيْنٍ لَا تَنْقَطِعُ، وَأَسْأَلُكَ الرِّضَاءَ بَعْدَ الْقَضَاءِ، وَأَسْأَلُكَ بَرْدَ الْعَيْشِ بَعْدَ الْمَوْتِ، وَأَسْأَلُكَ لَذَّةَ النَّظَرِ إِلَى وَجْهِكَ وَالشَّوْقَ إِلَى لِقَائِكَ فِي غَيْرِ ضَرَّاءَ مُضِرَّةٍ وَلَا فِتْنَةٍ مُضِلَّةٍ، اللَّهُمَّ زَيِّنَّا بِزِينَةِ الْإِيمَانِ، وَاجْعَلْنَا هُدَاةً مُهْتَدِينَ»(٤).

அல்லாஹ்வே! மறைவானதை நீ அறிந்திருப்பதைக் கொண்டும், படைப்புக்கள் மீது உனக்கிருக்கும் ஆற்றலை கொண்டும் (வேண்டுகிறேன்)! (எக்காலமெல்லாம் நான்) வாழ்வது எனக்கு நல்லது என்று நீ (உன் மறைவான ஞானத்தில்) அறிந்துவைத்துள்ள(ர்யோ அக்)காலமெல்லாம் என்னை வாழ்வை! (எப்போது நான்) மரணிப்பது எனக்கு நல்லது என்று நீ (உன் மறைவான ஞானத்தில்) அறிந்துவைத்துள்ள(ர்யோ அந்)நேரத்தில் என்னைக் கைப்பற்றிவிடு! அல்லாஹ்வே! மேலும், மறைவிலும் வெளிப்படையிலும் உன் (பக்தியுடன் கலந்த) அச்சத்தை உன்னிடம் கேட்கிறேன்! மேலும், திருப்தியிலும் கோபத்திலும் (நான்) சத்தியத்தை மொழிய வேண்டும் என உன்னிடம் கேட்கிறேன்! மேலும், ஏழ்மையிலும் வசதியிலும் (நான் அளவு கடக்காது, குறைவு செய்யாது) நடுத்தரமாக நடந்து கொள்வதை (அனுகூலம் புரியுமாறு) உன்னிடம் கேட்கிறேன்! மேலும், முடிவில்லாத (சுவன) இன்பத்தை உன்னிடம் கேட்கிறேன்! மேலும்,

(1) புகாரீ: (3370), முஸ்லிம்: (908), அறிவிப்பவர் :கஅப் இப்னு உஜ்ரா (ரலியல்லாஹு அன்ஹு).

(٢) رواه ابن ماجه (٣٨٤٦) بإسناد صحيح عن عائشة ﷺ، انظر «السِّلسلة الصَّحيحة» للألباني (١٥٤٢).

(3) இப்னு மாஜஹ்: (3846), அறிவிப்பவர்: ஆஇஷா (ரலியல்லாஹு அன்ஹா), அறிவிப்பாளர் வரிசை: ஸஹீஹ். பார்க்க: அல்பானீயின் அஸ்ஸில்ஸிலதுஸ் அஸ்ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா (1542).

(٤) رواه النَّسائي (١٣٠٥) بإسناد حسن عن عمار بن ياسر رضي الله عنهما.

துண்டித்துச் சென்றுவிடாத கண் குளிர்ச்சியை உன்னிடம் கேட்கிறேன்! மேலும், (நீ) விதி(யை தீர்மானித்தற்)க்குப் பின் (அதனை நான்) திருப்த்தி(யுடன் ஏற்றுக்)கொள்வதை உன்னிடம் கேட்கிறேன்! மேலும், மரணத்திற்குப் பிறகு குளிர்ச்சியான வாழ்வை உன்னிடம் கேட்கிறேன்! மேலும், (மறுமையில்) உன் முகத்தை பார்க்கும் இன்பத்தையும், (இம்மையில்) பாதிப்பை ஏற்படுத்தும் கஷ்டமோ வழிதவறச் செய்யும் சோதனையோ இல்லாமல் (இருக்கும் சூழ்நிலையில்) உன்னை சந்திப்பதற்கு ஆசை(ப்படும் மனோநிலை)யையும் (எனக்குத் தருமாறு) உன்னிடம் கேட்கிறேன்! அல்லாஹ்வே! ஈமானின் அலங்காரத்தை கொண்டு எம்மை அலங்கரிப்பாயாக! மேலும், எம்மை (மற்றவருக்கு) நேர்வழி காட்டுபவர்களாகவும் நேர்வழிபெற்றவர்களாகவும் ஆக்குவாயாக[1]!

❍ «اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ العَفْوَ وَالْعَافِيَةَ فِي الدُّنْيَا وَالْآخِرَةِ، اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الْعَفْوَ وَالْعَافِيَةَ فِي دِينِي وَدُنْيَايَ وَأَهْلِي وَمَالِي، اللَّهُمَّ اسْتُرْ عَوْرَاتِي وَآمِنْ رَوْعَاتِي، وَاحْفَظْنِي مِنْ بَيْنِ يَدَيَّ وَمِنْ خَلْفِي وَعَنْ يَمِينِي وَعَنْ شِمَالِي وَمِنْ فَوْقِي، وَأَعُوذُ بِعَظَمَتِكَ أَنْ أُغْتَالَ مِنْ تَحْتِي» (٢).

அல்லாஹ்வே! இம்மையிலும் மறுமையிலும் மன்னிப்பையும் (நோய்கள், ஏனைய துயரங்களில் இருந்து) ஈடேற்றத்தையும் உன்னிடம் கேட்கிறேன்! அல்லாஹ்வே! எனது மார்க்க(விடய)த்திலும் எனது உலக(விடய)த்திலும் எனது குடும்பத்திலும் எனது சொத்து( உடமை)களிலும் மன்னிப்பையும் பாதுகாப்பையும் உன்னிடம் கேட்கிறேன்! அல்லாஹ்வே! என்னில் மறைக்கப்பட வேண்டியவற்றை(யும் என் குறைகளையும்) மறைப்பாயாக! மேலும், என்னை அச்சப்படுத்தும் விடயங்களில் (இருந்து எனக்கு) அபாயமளிப்பாயாக! எனக்கு முன்னாலும் பின்னாலும் வலதாலும் இடத்தாலும் மேலாலும் (ஆபாத்துக்கள் வருவதிலிருந்தும், குறிப்பாக செய்த்தானிடமிருந்தும்) என்னை பாதுகாப்பாயாக! எனக்கு கீழால் உணர்ந்து கொள்ளமுடியாத விதத்தில் (மர்மமான முறையில் ஆபாத்து வந்து) நான் அழிவுக்குள்ளாக்கப்படுவதிலிருந்தும் உனது மகத்துவத்தை கொண்டு பாதுகாப்புத் தேடுகிறேன்[3]!

❍ «اللَّهُمَّ عَالِمَ الْغَيْبِ وَالشَّهَادَةِ، فَاطِرَ السَّمَوَاتِ وَالْأَرْضِ، رَبَّ كُلِّ شَيْءٍ وَمَلِيكَهُ، أَشْهَدُ أَنْ لَا إِلَهَ إِلَّا أَنْتَ، أَعُوذُ بِكَ مِنْ شَرِّ نَفْسِي وَشَرِّ الشَّيْطَانِ وَشِرْكِهِ»(٤).

அல்லாஹ்வே! மறைவானதையும் வெளிப்படையானதையும் அறிந்தவனே! வானங்களையும் பூமியையும் (முன் உதாரணமின்றிப்) படைத்தவனே! அனைவற்றினதும் இரட்சகனே! அவற்றுக்கு சொந்தக்காரனே (உரிமையாளனே)! உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் எவருமில்லை என்று சாட்சிகூறுகிறேன். எனது ஆத்மாவின் தீங்கிலிருந்தும், ஷைதானின் தீங்கிலிருந்தும், அவனது (தூண்டுதலால் ஏற்படும்) இணைவைப்பிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாவல் தேடி ஒதுங்கிக்கொள்கிறேன்[5]!

❍ «اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ الثَّبَاتَ فِي الأَمْرِ، وَالْعَزِيمَةَ عَلَى الرُّشْدِ، وَأَسْأَلُكَ مُوجِبَاتِ رَحْمَتِكَ، وَعَزَائِمَ مَغْفِرَتِكَ، وَأَسْأَلُكَ شُكْرَ نِعْمَتِكَ، وَحُسْنَ عِبَادَتِكَ، وَأَسْأَلُكَ قَلْبًا سَلِيمًا، وَلِسَانًا صَادِقًا، وَأَسْأَلُكَ مِنْ خَيْرِ مَا تَعْلَمُ، وَأَعُوذُ بِكَ مِنْ شَرِّ مَا تَعْلَمُ، وَأَسْتَغْفِرُكَ لِمَا تَعْلَمُ، إِنَّكَ أَنْتَ عَلَّامُ الْغُيُوبِ»(٦).

அல்லாஹ்வே! மார்க்கத்தில் (மரணம் வரை தொடர்ந்து உறுதியுடன்) நிலையாக இருப்பதையும் நேர்வழியை (சரியானதை) செயல்படுத்தும் உறுதியையும் உன்னிடம் கேட்கிறேன்! உனது அருளை கட்டயமாக்கக்கூடியவை(யான

---

(1) நஸாஈ :(1305), அறிவிப்பவர்: அம்மார் இப்னு யாசிர் (ரலியல்லாஹு அன்ஹுமா) ,அறிவிப்பாளர் வரிசை :ஹஸன்.

(٢) رواه أبو داود (٥٠٧٤) وغيره بإسناد صحيح عن ابن عمر رضي الله عنهما.

(3) அபூ தாவூத்: (5074), அறிவிப்பவர்: இப்னு உமர் (ரலியல்லாஹு அன்ஹுமா), அறிவிப்பாளர் வரிசை: ஸஹீஹ்.

(٤) رواه الترمذي (٣٣٩٢) وغيره بإسناد صحيح عن أبي هريرة ﷺ.

(5) திர்மிதி: (3392), அறிவிப்பவர்: அபூ ஹுரைரா (ரலியல்லாஹு அன்ஹு), அறிவிப்பாளர் வரிசை: ஸஹீஹ்.

(٦) رواه الطبراني في «الكبير» (٧١٣٥) عن شداد بن أوس ﷺ بإسناد حسن، وانظر «السِّلسلة الصَّحيحة» للألباني (٣٢٢٨).

நல்லமல்களை செய்தல்), மற்றும், உனது மன்னிப்பை ஈட்டித்தரக்கூடிய (நற்காரியங்களைச்) செயற்படுத்தும் உறுதிகள் ஆகியவற்றையும் உன்னிடம் கேட்கிறேன்! மேலும், உன் அருட்பாக்கியங்களுக்கு நன்றிசெலுத்துவதற்கும், உன்னை அழகான முறையில் வணங்குவதற்கும் (உதவிசெய்யுமாறு) உன்னிடம் கேட்கிறேன்! மேலும், (இணைவைப்பு, மற்றும், மார்க்க ரீதியான அனைத்து உளநோய்களில் இருந்தும் தூய்மை அடைந்த ஆரோக்கியமான) ஈடேற்றமான உள்ளத்தையும், உண்மையுரைக்கும் நாவையும் உன்னிடம் கேட்கிறேன்! (நான் அறிந்தோ, அறியாமலோ இருக்கின்ற;) நீ அறிந்துள்ள நலவுகளிலிருந்து நான் உன்னிடம் கேட்கிறேன்! நீ அறிந்துள்ள தீமைகளை விட்டும் நான் உன்னிடம் பாதுகாப்பு வேண்டுகிறேன்! (நான் அறிந்தோ, அறியாமலோ, மறந்தோ இருக்கின்ற;) நீ அறிந்துள்ளவை(யான குற்றங்களு)க்காக உன்னிடம் மன்னிப்பை கோருகிறேன்! நிச்சயமாக நீயே மறைவானவையை நன்கறிந்தவன்[(1)].

❍ «اللَّهُمَّ اكْفِنِي بِحَلَالِكَ عَنْ حَرَامِكَ وَأَغْنِنِي بِفَضْلِكَ عَمَّنْ سِوَاكَ»(٢).

அல்லாஹ்வே! நீ ஹராமாக்கியத்தை விட்டும் (தூரமாக்கி) நீ ஹலாலாக்கியதைக் கொண்டு எனக்கு போதுமாக்கி (நிறைவடைய) வைபாயாக! மேலும், உன் கொடையைக் கொண்டு என்னை உன்னைத் தவிருள்ளவர்களை விட்டும் தேவையற்று இருக்கச் செய்வாயாக[(3)]!

❍ «اللَّهُمَّ عَافِنِي فِي بَدَنِي، اللَّهُمَّ عَافِنِي فِي سَمْعِي، اللَّهُمَّ عَافِنِي فِي بَصَرِي، لَا إِلَهَ إِلَّا أَنْتَ، اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنَ الْكُفْرِ وَالْفَقْرِ، اللَّهُمَّ إِنِّي أَعُوذُ بِكَ مِنْ عَذَابِ الْقَبْرِ، لَا إِلَهَ إِلَّا أَنْتَ»(٤).

அல்லாஹ்வே! என் உடலில் (நோய்கள், ஆபாத்துக்கள் ஏற்படாமல்) எனக்கு ஈடேற்றத்தை (ஆரோக்கியத்தை)த் தருவாயாக! அல்லாஹ்வே! என் செவியிலும் ஈடேற்றத்தைத் தருவாயாக! அல்லாஹ்வே! என் பார்வையிலும் ஈடேற்றத்தைத் தருவாயாக! வணக்கத்திற்குரிய நாயன் உன்னைத் தவிர (எவரும்) இல்லை. அல்லாஹ்வே! நிராகரிப்பிலிருந்தும் வருமையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன். அல்லாஹ்வே! கப்ரின் வேதனையிலிருந்தும் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன். உன்னைத் தவிர வணக்கத்திற்குரிய நாயன் (எவரும்) இல்லை[(5)].

❍ «رَبِّ أَعِنِّي وَلَا تُعِنْ عَلَيَّ، وَانْصُرْنِي وَلَا تَنْصُرْ عَلَيَّ، وَامْكُرْ لِي وَلَا تَمْكُرْ عَلَيَّ، وَاهْدِنِي وَيَسِّرِ الْهُدَى لِي، وَانْصُرْنِي عَلَى مَنْ بَغَى عَلَيَّ، رَبِّ اجْعَلْنِي لَكَ شَكَّارًا، لَكَ ذَكَّارًا، لَكَ رَهَّابًا، لَكَ مِطْوَاعًا، لَكَ مُخْبِتًا إِلَيْكَ أَوَّاهًا مُنِيبًا، رَبِّ تَقَبَّلْ تَوْبَتِي وَاغْسِلْ حَوْبَتِي وَأَجِبْ دَعْوَتِي وَثَبِّتْ حُجَّتِي وَسَدِّدْ لِسَانِي وَاهْدِ قَلْبِي وَاسْلُلْ سَخِيمَةَ صَدْرِي»(٦).

என் இரட்சகனே! (உனக்கு வழிப்படுவதற்கு) எனக்கு உதவிசெய்! (நான் மனோ இச்சைக்கும் ஷைதானுக்கும் வழிப்படும் விதத்தில்) எனக்கெதிராக உதவிவிடாதே! (மார்க்க ரீதியான என் எதிரிகளுக்கு எதிராக) என்னை மிகைக்கச் செய்! எனக்கெதிராக (எதிரிகளையோ மனோ இச்சையையோ) மிகைக்கச் செய்துவிடாதே! (எதிரிகள்

---

(1) அல்முஃஜமுல் கபீர்: (7135), அறிவிப்பவர்: ஷத்தாத் இப்னு அவ்ஸ் (ரலியல்லாஹு அன்ஹு), அறிவிப்பாளர் வரிசை: ஹஸன். பார்க்க: அல்பானீயின் அஸ்ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா (3228).

(٢) رواه الترمذي (٣٥٦٣) بإسناد حسن عن علي ﷺ. وانظر «السِّلسلة الصَّحيحة» للألباني (٢٦٦).

(3) திர்மிதி: (3563), அறிவிப்பவர்: அலீ (ரலியல்லாஹு அன்ஹு), அறிவிப்பாளர் வரிசை: ஹஸன். பார்க்க: அல்பானீயின் அஸ்ஸில்ஸிலதுஸ் ஸஹீஹா (266).

(٤) رواه أبو داود (٥٠٩٠) بإسناد حسن عن أبي بكرة ﷺ.

(5) அபூ தாவூத்: (5090), அறிவிப்பவர்: அபூ பக்ரா (ரலியல்லாஹு அன்ஹு), அறிவிப்பாளர் வரிசை: ஹஸன்.

(٦) رواه الترمذي (٣٥٥١) وغيره بإسناد صحيح عن ابن عباس رضي الله عنهما.

உணரமுடியாத விதத்தில்) எனக்கு சார்பாக சூழ்ச்சிசெய்! எனக்கெதிராக (நான் அறியாத விதத்தில்) சூழ்ச்சிசெய்யாதே! எனக்கு நேர்வழி காட்டி (அவ்வழியில்) நடத்துவாயாக! நேர்வழியை எனக்கு (பின்பற்றுவதற்கு) இலகுவாக்குவாயாக! என் மீது வரம்பு மீறியவர்களுக்கு எதிராக என்னை வெற்றிபெறச் செய்வாயாக! என் இரட்சகனே! நீ என்னை உனக்கே (உள்ளத்தாலும், சொல்லாலும், செயலாலும்) மிகவும் நன்றிசெலுதுபவனாக, உன்னையே அதிகம் நினைவு கூறுபவனாக (சதாவும் திக்ர் செய்பவனாக), (மறைவிலும், வெளிப்படையிலும், துன்பத்திலும், இன்பத்திலும்) உன்னையே அதிகம் அஞ்சுபவனாக, மிகவும் உனக்கே வழிப்படுபவனாக, உனக்காகவே கீழ் பணிந்தவனாக, உன் பக்கமே அதிகம் (உள்ளமுருகி இறைஞ்சி) தாழ்ந்து நடப்பவனாக, (உன் பக்கமே என் அனைத்துக் காரியங்களிலும், பாவங்களிலிருந்தும்) மிகவும் மீளக்கூடியவனாக ஆக்கிவைப்பாயாக! என் இரட்சகனே! என் பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்வாயாக! என் குற்றங்களை கழுவிவிடுவாயாக! என் அழைப்புக்குப் பதில் அளிப்பாயாக! என் ஆதாரத்தை பலப்படுத்துவாயாக! என் நாவை சீர்செய்வாயாக! என் உள்ளத்திற்கு வழிகாட்டுவாயாக! என் நெஞ்சத்திலுள்ள குரோதத்தை (மற்றும் விரோதம், பொறாமை, கோபம் போன்ற உளநோய்களை) அகற்றுவாயாக[(1)]!

❍ «اللَّهُمَّ لَكَ الْحَمْدُ كُلُّهُ، اللَّهُمَّ لَا قَابِضَ لِمَا بَسَطْتَ، وَلَا بَاسِطَ لِمَا قَبَضْتَ، وَلَا هَادِيَ لِمَا أَضْلَلْت، وَلَا مُضِلَّ لِمَنْ هَدَيْتَ، وَلَا مُعْطِيَ لِمَا مَنَعْتَ، وَلَا مَانِعَ لِمَا أَعْطَيْتَ، وَلَا مُقَرِّبَ لِمَا بَاعَدْتَ، وَلَا مُبَاعِدَ لِمَا قَرَّبْتَ، اللَّهُمَّ ابْسُطْ عَلَيْنَا مِنْ بَرَكَاتِكَ وَرَحْمَتِكَ وَفَضْلِكَ وَرِزْقِكَ، اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ النَّعِيمَ الْمُقِيمَ الَّذِي لَا يَحُولُ وَلَا يَزُولُ، اللَّهُمَّ إِنِّي أَسْأَلُكَ النَّعِيمَ يَوْمَ الْعَيْلَةِ، وَالْأَمْنَ يَوْمَ الْخَوْفِ، اللَّهُمَّ إِنِّي عَائِذٌ بِكَ مِنْ شَرِّ مَا أَعْطَيْتَنَا وَشَرِّ مَا مَنَعْتَ، اللَّهُمَّ حَبِّبْ إِلَيْنَا الْإِيمَانَ وَزَيِّنْهُ فِي قُلُوبِنَا، وَكَرِّهْ إِلَيْنَا الْكُفْرَ وَالْفُسُوقَ وَالْعِصْيَانَ، وَاجْعَلْنَا مِنَ الرَّاشِدِينَ، اللَّهُمَّ تَوَفَّنَا مُسْلِمِينَ، وَأَحْيِنَا مُسْلِمِينَ، وَأَلْحِقْنَا بِالصَّالِحِينَ غَيْرَ خَزَايَا وَلَا مَفْتُونِينَ، اللَّهُمَّ قَاتِلْ الْكَفَرَةَ الَّذِينَ يُكَذِّبُونَ رُسُلَكَ، وَيَصُدُّونَ عَنْ سَبِيلِكَ، وَاجْعَلْ عَلَيْهِمْ رِجْزَكَ وَعَذَابَكَ، اللَّهُمَّ قَاتِلْ الْكَفَرَةَ الَّذِينَ أُوتُوا الْكِتَابَ إِلَهَ الْحَقِّ»[(٢)].

அல்லாஹ்வே! உனக்கே எல்லாப் புகழும். நீ விசாலமாக்கியத்தை சுருக்ககுபவர் (நெருக்கடியாக்குபவர் எவரும்) இல்லை (யாராலும் முடியாது). நீ சுருக்கியத்தை விசாலப்படுத்துபவர் (எவரும்) இல்லை. நீ வழிதவறச் செய்தவனுக்கு நேர்வழி படுத்துபவன் (யாரும்) கிடையாது. நீ நேர்வழிப் படுத்தியவனை வழிகெடுப்பவன் (யாரும்) கிடையாது. நீ தடுத்ததை கொடுப்பவனுமில்லை. நீ கொடுத்ததை தடுப்பவனுமில்லை. நீ தூரமாக்கியத்தை நெருக்கிவைப்பவனும் கிடையாது. நீ நெருக்கிவைத்ததை தூரமாக்குபவனும் கிடையாது. அல்லாஹ்வே! உன் பரகத்கள் (அருள்வலங்கள், பாக்கியங்கள்), உன் கருணை, உன் கொடை, உன் வாழ்வாதாரம் ஆகியவற்றிலிருந்து எங்கள் மீது விசாலப்படுத்துவாயாக! அல்லாஹ்வே! நான் உன்னிடம் மாறாத, நீங்காத நிலையான (சுவன) இன்பத்தை கேட்கிறேன். அல்லாஹ்வே! நான் உன்னிடம் வறுமை நாளில் இன்பத்தையும், அச்ச நாளில் அபயத்தையும் (பாதுகாப்பையும்) கேட்கிறேன்! அல்லாஹ்வே! நீ எங்களுக்கு கொடுத்தவையின் கெடுதியிலிருந்தும், நீ தடுத்தவையின் கெடுதியிலிருந்தும் நான் உன்னிடம் பாதுகாப்புத் தேடி ஒதுங்கிக் கொள்கிறேன்! அல்லாஹ்வே! எங்களுக்கு ஈமானை விருப்பமாக்கி வைப்பாயாக! அதனை எங்கள் உள்ளங்களில் அலங்கரிப்பாயாக! மேலும், எங்களுக்கு குப்ரையும் (நிராகரிப்பையும்), வழிப்படாமல் இருப்பதையும், பாவம் செய்வதையும் வெறுக்கச் செய்வாயாக! மேலும், நேர்வழிநடப்பவர்களாக எம்மை ஆக்குவாயாக! அல்லாஹ்வே! எம்மை முஸ்லிம்களாக கைப்பற்றுவாயாக (மரணிக்கச்செய்வாயாக)! (மரணம் வரை) முஸ்லிம்களாக வாழவைப்பாயாக! (பாவத்தின் காரணமாக) இழிவடைந்து வேட்கித்தவர்களாகவோ (மார்க்க ரீதியாக) சோதிக்கப்பட்டவர்களாகவோ இல்லாத நிலையில் (மறுமையில்) நல்ல (சாலிகான)வர்களுடன் சேர்த்து விடுவாயாக! அல்லாஹ்வே! உன் தூதர்களை பொய்பிக்கும், உன் பாதையை விட்டும் (மற்றவர்களை) தடுக்கும் நிராகரிப்பாளர்களை சபிப்பாயாக / பகைப்பாயாக / கொல்லுவாயாக! உன் வேதனையையும் உன் தண்டனையையும் அவர்கள் மீது ஆக்குவாயாக! வேதம் கொடுக்கப்பட்ட நிராகரிப்பாளர்களை சபிப்பாயாக! சத்திய வணக்கத்திற்குரியா நாயனே[(3)]!

---

(1) திர்மிதி: (3551), அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ் (ரலியல்லாஹு அன்ஹுமா), அறிவிப்பாளர் வரிசை: ஸஹீஹ்.

(٢) رواه الإمامان أحمد (١٥٤٩٢) و البخاري في «الأدب المفرد» (٦٩٩) بإسناد صحيح عن رفاعة الزرقي ﷺ.

(3) அஹ்மத்: (15492), அல்அதபுல் முப்ரத்: (699), அறிவிப்பவர்: ரிபாஅதுஸ் ஸுறகீ (ரலியல்லாஹு அன்ஹு), அறிவிப்பாளர் வரிசை: ஸஹீஹ்.